உ
|| ஓம் நம: சிவாய ||
ஓம் நமோ பகவதே ஹரதத்தாய

சேக்கிழார் காவ்யம்

# சிறுத்தொண்ட நாயனுர்

**(சில புதிய கருத்துக்கள்)**



எழுதியவர்
**திருவையாறு அண்ணுஸ்வாமி சிரௌதிகள்**

வெளியீடு நன்ஞள்
ஸ்ரீ குரோதி ஹு ஆனி மீ 30உ (13-7-64) சுக்லபஞ்சமி = ஸோமவாரம்
முதற்பதிப்பு -1000 பிரதிகள்
விஜல 25 காசு; தபாற் செலவு 5 காசு

வெளியிடுபவர்:
**தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி**
பணியாளர், ஸ்ரீ ஹரதத்தர் பக்த ஜன ஸபை
கோட்டூர் அக்ரஹாரம், துகிலி போஸ்டு
நரசிங்கம்பேட்டை வழி, தஞ்சாவூர் ஜில்லா

உ

ஸோமாஸ்கந்த மூர்த்தயே நம:



**தக்ஷாலம் பித வாம நித்ரிதபதம்**
**கிருஷ்ணு ம்ருகம் சாபயம்**
**டங்கம் சா தயிதம் வரம் ச கடகம்**
**பிப்ராணகம் வாமகே!**
**வாமா லம்பித நித்ரிதான்ய பதயா**
**தேவ்யா யுதா மத்யகே**
**ஸ்கந்தேனுப்ஜ கர த்வயேன ஸஹிதம்**
**ஸோமாத் குஹேசம் பஜே!**

உ

# முகவுரை

தெய்வப்புலவர் சேக்கிழார் பெருமான் பாடிய திருத் தொண்டர் புராணம் இணையற்ற ஓர் மகா காவ்யம். வேத ஆகமங்கள் சைவ, ஸித்தாந்த சாஸ்திரங்கள், இதர திருமுறைகள் இவற்றின் தாத்பர்யங்களையும், உபதேசங்களையும், நன்கு விளக்கும் முறையில் எழுதப்பெற்ற ஓர் சிறந்த பக்தி கிரந்தம். "தெய்வம் மணக்கும் செய்யுள் எலாம்" என்பது அதன் தனிச் சிறப்பு.

ஸமீபத்தில் சிவபதம் அடைந்த திரு. ஸி. கே. ஸுப்ரமண்ய முதலியார் அவர்கள் சேக்கிழார் காவ்யத்தில் உள்ள நயங்களையும் சாஸ்திரக் கருத்துக்களையும் அடியார்களின் அன்பின் திறத்தையும், விளக்கி சிறந்த விரிவுரை எழுதியிருக்கிறுர். மூல க்ரந்தம் போலவே விரிவுரையும் ஒப்பற்றது.

ஆயினும் சில சில இடங்களில் எனக்கு வேறு விதமான அபிப்ராயங்கள் இருக்கின்றன. சைவஸ்தாபன சார்யவர்யர் ஸ்ரீ ஹரதத்தர் ஈச்வர லக்ஷணங்களில் ஒன்றுக "யோ ந: பிரசோதயதி புத்திம்" என்ற விஷயத்தை விளக்கியிருக்கிறுர். நம்முடைய புத்தியில் புதிய கருத்துக்கள் உதிப்பதும் ஈச்வரன் அருளே யென்ற திடமான நம்பிக்கை கொண்டுதான் என் மனதில் உதித்த சில புதிய கருத்துக்களை வெளியிடுகின்றேன்.

வித்வான்களும் பக்திமான்களும் அவற்றை ஆராய்ந்து பார்த்து, பக்தித் துறையில் அவரவர் மனே பக்குவத்திற்குத் தகுந்தபடி அமைத்துக் கொள்ளலாம்.

இதே முறையில் மற்றும் சில அடியார்களுடைய சரித்திரங்களிலும், என் மனதில் உதிக்கும் சில புதிய அபிப்ராயங்களை வெளியிடலாமென்ற எண்ணம் உண்டு. திருவருள் துணைநின்று அன்பர்கள் ஆதரவும் கூடினுல் எனதெண்ணம் பூர்த்தியாகும்.

சுபம்!

வாழ்க சைவம்! வெல்க சிவ பரத்வம்!

**தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி**

உ

# ஈச்வர, குரு வணக்கம்

### (1) தக்ஷிணுமூர்த்தி

குரவே ஸர்வ லோகானும் பிஷஜே பவரோகிணும் ।
நிதயே ஸர்வ வித்யானும் தக்ஷிணு மூர்த்தயே நம: ॥

### (2) நடராஜர்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

### (3) சைவ ஸமயாசார்யார்கள்

பூழியர்கோன் வெப்பொழுத்த புகலியர்கோன் கழல் போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரா னடி போற்றி
வாழிதிரு நாவலூர் வன் தொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர் திருத் தாள் போற்றி.

### (4) சைவ ஸ்தாபஞசார்யவர் ஸ்ரீ ஹரதத்தர்

அறுகுண பூர்ணனுவான் அருமறை வணக்கம் கூறி
முறையிடு மீசன் த்யானம் மூவெழு யாகங் கட்கும்
இறை பர மேசன் என்றும், மறைமொழி காயத்ரியும்
பிறையணி பவஐனப் போற்றும் பெருமைகள் பலவும் சொன்ன
குருஹர தத்தா சார்யர் திருவடி தஐலமேற் கொள்வாம்.

### (5) அடியார்கள், சேக்கிழார்.

தில்ஐலவா ழந்தணரே முதலாகச் சீர் படைத்த
தொல்ஐலயதாந் திருத் தொண்டத் தொகையடியார் பதம் போற்றி
ஒல்ஐலயவர் புராண கதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர் சேக்கிழார் அடி போற்றி

உ

# சிறுத்தொண்ட நாயனுர் புராணம்

## சேக்கிழார் காவ்யத்தில் சில புதிய கருத்துக்கள்

[குறிப்பு: முதலில் போட்டிருக்கும் எண் சேக்கிழார் புராணத்தில் செய்யுள் எண்.]

(4) "தெள்ளி வடித் தறிந்த பொருள் சிவன்கழலிற் செறி வென்றே.
இந்த உண்மையை வடமொழிக் கிரந்தங்களிலும் பலர் எடுத்துக் காட்டியிருக்கிறுர்கள்.

ஸர்வோப நிஷதாம் ஸாரம் சிவதத்வம் பவேத்
நாராயணேுப நிஷதா யதுபாஸனேுக்தா
ஹாலாஸ்ய மாகாத்ம்யம் - ஸத்யம் ப்ரவீமி -

**(12)** **வேதகாரணர்:** - வேதியா, வேதகீதா - (அப்பர்)
வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல் - (திருமந்திரம்)

அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதம் யதேதத் ருக்வேத:
யஜுர்வேத; ஸாமவேத; (பிரஹதாரண்யக உபநிஷத்) அனுயாஸமாக எந்தப் பரமனது மூச்சுக்காற்று ரூபமாக (ஸகஜமாக) வெளிவந்ததோ இந்த ருக்வேதம், யஜூர் வேதம், ஸாமவேதம்

**(36)** தண்டாத தொருவேட்கைப் பசியுடையார் தமைப்போல.
(சாந்தோக்ய உபநிஷத் (8-1-5) - ஏஷ ஆத்மா அபஹத பாப்மா - விஜரோ - விம்ருத்யுர் விசோகோ, விஜிகிப்ஸோ அபிபாஸ: ஸத்யகாம: ஸத்ய ஸங்கல்ப்ப இந்த பரமாத்மாவானவர் பாபமிலர் ஜரையிலர், மரணமிலர். சோகமிலர், பசியிலர், தாகமிலர் ஸத்யகாமர், ஸத்யஸங்கல்ப்பர். பசி யுடையவர் போல் நடிக்கின்றார்.

**(38)** "மாதரார் தாமிருந்த இடவகையிற் றனிபுகுதோம்"
புருஷர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறையை ஈச்வரனே நடத்திக் காண்பிக்கிறார் அடியாராக வந்த பெருமானை நமஸ்கரித்து உள்ளே எழுந்தருளி அமரவேண்டுமென்று திருவெண்காட்டு நங்கையார் மிகவும் இறைஞ்சியும் "எப்பரிசும் அவர் ஒழிய இங்கிரோம்" என்று ஈச்வரன் சொன்னுர். மற்ற தேவதை களைப் பற்றிய புராணங்களில் இந்த உயர்ந்த நெறி விளங்குவதை நாம் காண்கி லோம். பிருகு முனிவர் வெளியே போயிருந்த ஸமயம் மகாவிஷ்ணு ஆச்ரமத்திற் குள் சென்று - தனியாகவிருந்த பிருகு பத்னியுடன் தர்க்கம் பண்ணி அவள் தடுத்தும், ஆச்ரமத்தில் தஞ்சம் புகுந்திருந்த அஸுரர்கள் மீது தம் சக்ராயுதத்தை ஏவினுர், அஸுரர்களுக்கு அபயம் கொடுத்திருந்த ப்ருகுபத்னி அதை எதிர்த்து நிற்க, சக்ரா யுதம் அவள் சிரஸ்ஸை அறுத்து வீழ்த்தியது,

[திரு.கி.வா.ஜ: - அவர் வீட்டுக்குள் "புகுந்து" (பக்கம் 21)*
* நாயன்மார் கதை 3 - ம் பாகம்

**(41)** "மற்றவர் தாம் நண்ணினுல் நாமிருந்த பரிசுரைப்பீர்"

பிரஸங்கம் செய்யும சிலர் இந்த இடத்தில் தம் சொந்த வார்த்தைகளைச் சேர்த்து விடுகிறுர்கள் "உம் கணவர் வந்தால் அங்கு வரச் சொல்வீர்" என்று ஈச்வரன் சொன்னதாகப் பேசி விடுகின்றுர்கள் 'வரச் சொல்' என்று பைரவர் சொன்னதற்காக சிறுத் தொண்டர் போகவில்லை. அடியார்களைத் தாமாக நாடிச் சென்று வருந்தி யழைக்கும் குணமுடையார் அவர்.

**(46)** "எம்மைப் பரிந்தூட்ட முடியா துமக்குச் செய்கை யரிதொண்ணுது"

இந்தப் பீடிகையைக் கேட்டபோதே 'பெரிய' சிறுத் தொண்டர் மனதில், அடுத்து வரப்போகும் விஷயம - பசு - அதுவும் நரப் பசு - புலனுகியிருக்கும் என்று நாம் அறிய வேண்டும்.

**(49)** "முந்நிரையுடையேன்"

திரு. ஸி கே. ஸுப்ரமண்ய முதலியார் -

முந்நிரை யென்றுல் பசுக்கூட்டம், ஆட்டுக் கூட்டம், எருமைக் கூட்டம் என்று அர்த்தம் செய்திருக்கிறுர். எருமைக் கூட்டம் என்ற மூன்றுவது குறிப்பு ஸரியென்று என் மனதில் படவில்லை.

46-ம் செய்யுளில் ஈச்வரன் - முடியாது - செய்கையரிது - ஒண்ணுது - என்று சொன்னுர். பசுவையோ பசுவையோ ஆட்டையோ, எருமையையோ வீழ்த்தி உண்பவரானுல் - முடியாதென்றும், செய்கை யரிதென்றும் ஒண்ணு தென்றும் தென்றும் சொல்லியிருக்க வேண்டிய அவசியமில்லை.

பசுக்கள் மூன்று விதம்.

(1) பால் கொடுக்கும் பசு (அதன் ஆண் உள்பட)
(2) யாகங்களில் பசு என்று பேசப்படும் ஆடு (அதன் வர்க்கம்)
(3) தேவர்கள், மனிதர்கள் முதலிய ஸகல ஜீவராசிகளும் பசுக்களே, பரமேச்வரன் ஒருவரே பசுபதி.

ஆகவே மூன்றுவதாக சிறுத் தொண்டர் குறித்த பசு வர்க்கம் தங்கள் குடும்பத்தி னரையே - (நரப்பசுக்கள்) தங்கள் குடும்பத்தில் நரப்பசுக்கள் மூவர் இருப்பதும் குறிப்பு.

பயிரவர் திருவாய் மலர்ந்தருள்வதன்முன் அவர் மனதை நாயனுர் அறிந்து விட்டார், மேற் கொண்டு விவரங்களை ஈச்வரன் வாக்கிலிருந்து வர வழைக்கும் அழகைப் பாருங்கள். சிறுத்: அடியார்க்கு அமுதாம் பசுத்தானென்ன?

பயிரவர்: 'நரப் பசுவாம்'

சிறுத்: (அப்படிவாரும் வழிக்கு - ரொம்ப ஸந்தோஷம்!)
பயிரவர்: "ஐந்து பிராயத்துள்"
சிறுத்: (அதுவும் ஸந்தோஷம்; 6 வயது, 7 வயது என்று சொல்லாமல் 5 வயது என்கிறீர்களே. எங்கள் பையனுக்கு 5 வயது தான்)
பயிரவர்: "உறுப்பில் மறுவின்றேல்'"
சிறுத்: (ஈச்வர கிருபையால் குழந்தைக்கு மறுவொன்றுமில்ஂல.)
பயிரவர்: "ஒரு குடிக்கு ஒரு சிறுவன்"
சிறுத்: (அதுவும் நாங்கள் செய்த பாக்கியம் தான்.எங்கள் குடிக்கு ஒரு சிறுவன் தான்)
பயிரவர்: தாதை யரியத் தாய் பிடிக்கும் பொழுதில்
சிறுத்: (ஆஹா! எங்கள் பாலும் உங்கள் கருஂண இருக்கும் வண்ணம் என்னே! எங்கள் மனதில் புத்ரபாசம் நீங்க அருள் புரிகின்றீர்))
பயிரவர்: "தம்மில் மனமுவந்தே"
சிறுத்: (ஈச்வரன் அடியார் - நடமாடும் தெய்வம்
உமக்கு அர்ப்பணம் செய்வதில் மனக்லேசத்திற் கிட மேது? நான் இப்பொழுதே மனம் உவந்தேன். என் மஂனவியும் என்னுடன் கருத்து ஒருமித்து ஆதரவு படுபவள். அவளும் ஸந்தோஷிப்பாள். ஹே பெரி யோரே - உமது அருளால் எங்கள் குழந்தையும் மனம் உவப்பான்.)

பரமேச்வரன் தாம் சொல்லச் சொல்ல - சிறுத்தொண்டரின் மனம் பூரித்ததைக் கண்டு அவருடைய அன்பை நுகர்ந்து அனுபவிக்கின்ருர்.

**(49)** இந்தச் செய்யுளுக்கு எழுதிய விரிவுரையில் திரு. ஸுப்ரமண்ய முதலியார்.

"நாயனர் தமது மாமாத்திரர் குல மரபின் தன்மையால் புலாலுணவு விலக்கியவர் அல்லர் என்பது

(1) புலால் உணவைத்தாமே அமைக்கும் திறத்தாலும்
(2) சந்தனத் தாதியார் தஂலயிறைச்சி யமைத்த திறத்தாலும்
(3) இவை பற்றியே உத்தராபதியார் இவர் பால் பசுப்படுத்த (புலால்) அமுது வேண்டினர் என்ற நிஂலயாலும், கருத உள்ளன என்று எழுதியிருத்கி ருர். இந்த அனுமானம் ஸரியென்று என் மனதிற்குப் படவில்ஂல.

**(1,2)** புலால் உண்பவர்களான படியால் தான் நர மாம்சம் பக்குவமாக சமைத்தார்கள் என்று முடிவு கட்டலாமா? புத்திசாலிகள் **அவசியம் நேர்ந்தால்** எந்த மிருகத்தையும் சேதித்து எலும்பு நரம்புகஂளக் கழித்து - மாம்ச பாகத்தை வேகவைத்து, வதக்கி, தாளித்துப் பக்குவம் பண்ணக்கூடும் நாயனர் மனித சரீரத்தைதான் பக்குவம் பண் ணுகிருர். ஆயுர் வேதக்கஂலயில் முற்றிலும் தேர்ச்சி பெற்ற நாயனருக்கு சரீரத்தில் ஒவ்வொரு பாகத்தின் தன்மை குணம் எல்லாம் நன்கு தெரிந்திருக்கும். சரீரத்தைப் பாகம் பண்ணினர் என்ற காரியம் கண்டு நாயனர் புலால் உண்பவர் என்று தீர்மானிக்க வேண்டாம்.

(3) ஈச்வரன் புலால் உணவு கேட்ட காரணம் கொண்டும் நாயஞர் புலால் உண்பவர் என்று தீர்மானிக்க வேண்டாம்.

அவ்விதமாயின், ஈச்வரன் நரப்பசு கேட்டார் என்றும் சிறுத்தொண்டர் குழந்தை யை நன்ருகப் பாகம் செய்தாரென்றும் காரணங்கள் பற்றி ஒரோர் ஸமயம் சிறுத் தொண்டர் குழந்தைகள் மாம்சம்கூட சாப்பிட்டிருப்பார் என்று முடிவு கட்டலாமே!

பசு மாம்சம் கேட்கப் போகும் ஈச்வரன் “முடியா துமக்கு, செய்கை யரிது ஒண்ணுது" என்று சொன்ன படியால்,

மாம்சவகைச் சாப்பிட்டு அறியாத- (pure vegetarian) ஆன நாயஞருக்கு - மாம்ச போஜனம் தயாரிப்பது அரிது ஒண்ணுது - என்று ஈச்வரன் குறிப்பிட்டதாக அர்த்தம் பண்ண வேண்டும்.

சிவபூஜை, சிவபக்தி, ஆசாரம் உள்ள சைவர்கள் இன்றைக்கும் மாமிசம் சாப்பி டாமலிருக்க, பெரிய அடியாரான சிறுத்தொண்டர் புலால் சாப்பிடும் வழக்கமுடை யவர் என்று முடிவுகட்டுவது சரியல்ல.

உண்மையில் ஈசவரன் புலால் உண்ணவோ நரப்பசு வீழ்த்தி சாப்பிடவோ வந்தவரல்ல.

உலகபாசம், உடற்பாசம் புத்ர பாசம் ஒன்றும் இல்லாமல் ஈச்வரனுக்கு ஆட்பட்டவர்கள் என்பதை உலகத்தினர்க்கு விளக்கம் செய்து, அவர்கள் தம்பால் கொண்ட அன்பை நுகர்ந்து அருளவே ஈசுவரன் வந்தார்.

சிறுத் தொண்டரையோ, அவர் மஜனவியையோ பசுவாகக் குறித்தால் இருவரும் மனமுவந்து தம் உயிரைத்யாகம் செய்திருப்பார்கள்.

உலகத்தில் எந்த தந்தையும் தாயும் தம் உயிரைக் கொடுத்தும் தங்கள் குழந்தையைக் காப்பாற்றுவதில் அபிமான முள்ளவர்கள். அந்த விதமான பாசம் இவர்களுக்கு இல்ஜல யென்று காண்பிக்கவே குழந்தைப் பசுவைக் கோரினார்.

நாயஞர் புலால் உண்பவர் என்பதற்காகப் பசுவைக் கோரவில்ஜல.

(55) **"சிறுவன் றஜனப் பெறுமா றெவ்வாறு"** என்று வணங்கு(தலும்:

54-ம் செய்யுளில் அடியார் அமுதுண்ண இசைந்த விவரம் சொன்னதுமே, திருவெண்காட்டு நங்கையாரும் உண்மையை ஊகித்து உள்ளம் பூரித்தாளென்று நாம் கொள்ள வேண்டும். ஆதலால் "சிறுவன்றனைப் பெறுமாறு றெவ்வாறு”

என்று - என்று சொல்லி - (கேள்வியல்ல)

வணங்குதலும்: - கணவர் அபிப்ராயம் தெரிந்து கொள்ள வேண்டி வணங்குகிறுள்.

பதியின் மனமறிந்து - அவ்வழி நடப்பதே ஸதியின் தர்மம்

(55) இந்த இடத்தில் திரு. ஸுப்ரமணிய முதலியார் - நங்கையாரின் பெருமை விளங்க விரிவுரை எழுதவில்லை. என்பது தான் என் அபிப்ராயம்.

சிறுத் தொண்டரைப் போல், நங்கையாரும் விஷயத்தை கணவர் சொல்லும் போதே அறிந்து கொண்டாள். அவள் மனமும் பக்குவம் அடைந்த மனம்.... கணவன் அபிப்ராயத்தைச் சொன்ன பிறகு அவர் வார்த்தைக்குக் “கட்டுப்பட்டு” இசைந்தாள் என்று நினைக்கக் கூடாது. கணவர் அபிப்ராயம் தன் அபிப்ராயத்துக்கு ஒத்து இருக்கவே ஸந்தோஷமாக இசைந்தாள். இருவர்களும் - இயல்பாக, ஸ்வயமாக கருத்து ஒருமித்தார்கள் அதனுல் தான் ஈச்வரன் அருளுக்கு அவளும் பாத்ரமாகிறுள், பத்னி என்ற கடமைக்காக அவள் இசையவில்லை.

மேலும்.

"தம்மில் மனம் உவந்தே”

என்று. ஈச்வரன் சொன்னதை ஒரு நிபந்தனையாகக் கொண்டு நாயனுரும் நங்கையாரும், அரியும் ஸமயத்தில் ஸந்தோஷத்தை வருவித்துக் கொண்டார்கள் என்று இல்லை அது அடியார்களுக்குப் பெருமையல்ல.

ஈச்வரன் சொன்னதின் உண்மையான கருத்து என்ன?

- யாரேனும் தம்பதிகள் தம் ஒரே புதல்வனை (5-வயது, மறுவின்றேல்) தம்மில் மனம் உவந்து தாங்களாகவே மனம் உவந்து இயல்பாகவும், ஸ்வயமாகவும் மனம் உவந்து - அரியும் போது மனம் உவந்து - படைக் கும் போதும் மனம் உவந்து, எந்த நிலை ஏற்பட்டாலும் மனம் உவந்து போடுவார்களேயானுல் - தான் சாப்பிடுவது என்ற தம் விரதத்தைச் சொன் னுர்.

நாயனுரும் நங்கையாரும்: இயல்பாக, ஸ்வயமாக - அடியார் பெருமையை எண்ணி – (அவர் சொன்ன நிபந்தனைக்காக அல்லாமல்) தம்மில் - தாமாக மனம் உவந்து ஈடுபடுகிறுர்கள் இந்த விளக்கத்தை அன்பர்கள் பன்முறையும் படிப்பார்க ளாக!

**“தம்மில் மன முவந்தே"**

(39) வம்பென நீ ரெழுந்தருளி வருந்திரு வேடங் கண்டால்
(43) அடியேன் உய்ந்தேன்!”
(45) தவத்தால் உமைக் கண்டேன்
(52) இதுவும் அரிதன்று, எம்பெருமான் அமுது செயப் பெறில்
(63) நனிநீ டுவகை யுறுகின்றார்
(64) இருவர் மனமும் பேருவகை எய்தி

(68) அடியேன் பால் நண்ணி
(69) நிதியிரண்டும் குறைவெனொருவன் பெற்று உவந்தாப் போல்
(82) திருத் தொண்டர் உண்ணப் பெற்ருேம் எனும் பொலிவால்

அடியார் உத்தரவு ப்ரகாரம் கணவருக்குப் படைக்கும் போதும் நங்கையார். அடியார் பிரஸாதம் என்ற திருப்தியுடன் படைக்கிருள்; நாயஞர் உண்ணப் புகும் போதும் - அடியார் பிரஸாதம் என்று ஸந்தோஷத்துடன் உண்ண ஆரம்பிக்கிருர்.

(56) **நிஜேவு நிரம்ப நிதி கொடுத்தால் தருவா ருளரே!!**

இந்த இடத்திலும் திரு.ஸி. கே. ஸு. முதலியார் வேறு விதமாக அர்த்தம் பண்ணிவிட்டார்.

உளர் - உளர்ஆவார்: ஏகாரம் இதஜேச் செய்வாரும் உளராவர் என்ற சிறப்பின் கண் வந்தது - என்று விளக்கம் போட்டிருக்கிருர். நிரம்ப நிதி கொடுத்தால் குழந்தை யைக் கொடுப்பார் உளர் ஆவர் என்ற அபிப்ராயம் சிறுத் தொண்டர் வாக்கில் வரலாமா? இந்த அபிப்ராயம் தொனிக்க சேக்கிழார் பதங்கள் போடுவாரா? சந்தை யில் பதார்த்தங்கள் வாங்குவது போல் பிள்ஜேயைப் பணம் கொடுத்து வாங்கலாம் என்று சிறுத்தொண்டர் நிஜேத்திருப்பாரா? அவர் சொல்லும் பதில்

"ஏன்" ஏன் யோஜிக்கின்றாய்! சிறுவஜேப் பெறுவது பணம் கொடுத்து வாங்கும் விஷயமா? நிரம்ப நிதி கொடுத்தால் தருவார் உளரே - என்ருல்

தருவார் உளரோ! - **இருக்க மாட்டார்கள்** என்று தான் அர்த்தம்.

சிறுவஜேப் பெற என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள் என்று மஜேவி கேள்வி கேட்டது போலும்.
சிறுத்தொண்டர் - நிரம்ப நிதி கொடுத்தால் பிள்ஜேயைத் தருவார் "உளராவர்" என்று சொல்லி

ஆஞல் 'நேர் நின்று அரிவாரில்ஜே' யென்ற முக்கிய காரணம் பற்றி

தம் பிள்ஜேயை அழைப்போம் என்று முடிவு செய்த மாதிரி அர்த்தம் பண்ணிஞல் நாம் சிறுத் தொண்டருக்கும், நங்கை யாருக்கும் - அவர்கள் பெருமை யைப் பாடின சேக்கிழாருக்கும் அபசாரம் செய்தவர்களாவோம்.

ஆழ்ந்த பக்தியுடைய வேறு தம்பதிகள் மனமுவந்து தங்கள் குழந்தையை சிவார்ப் பணமாகக் கொடுக்க முன் வந்தாலும் சிறுத் தொண்டர் அதை அங்கீகரிப் பாரா, அதஞல் அவருக்கென்ன புண்ணியம்? ஆகவே

**தாழாதே எஜேயிங் குய்ய நீ பயந்தான்**
**றன்ஜே யழைப்போம் யாமென்று**

தன் அபிப்ராயத்தைத் தெரிவிக்கிருர்

ஈசனடியாருக்குத் தங்கள் குழந்தையை அர்ப்பணம் செய்யும் விஷயத்தில் இருவரும் காதல் கொண்டு, கருத்து ஒருமித்து ஆதரவு பட்டார்கள்.

அவர்களுடைய அன்பை பயிரவர் மறுபடியும் பருகுகின்ருர்

**மேலும்:** திரு. ஸி. கே. ஸுப்ரபணிய முதலியார் அவர்கள் கண்ணப்ப நாயனுருடைய சரித்திரத்தில் இது போன்ற ஓர். ஸந்தர்ப்பத்தை மிக அழகாக விளக்கியிருக்கிருர், காளத்தியப்பர் கண்ணில் ரக்தம் வந்தபோது "ஊனுக்கு ஊன்" என்று கண்ணப்பர் முடிவு செய்கிருர், இந்த காலத்தில் - வேறு மிருகத்தின் கண்ணைப் பதிய வைப்பது போல கண்ணப்பர் திட்டம் போடவில்லை, ஈச்வரன் கொடுத்த கண்கள் தனக்கு இருக்கும் போது தன் கண்ணை ஈச்வரார்ப்பணம் செய்வதே முறை யென்று தீர்மானித்து, தன் கண்ணை வேருடன் பெயர்த்து அப்பினுர்.

அதே போல் இந்த இடத்திலும் அடியார் சொன்ன லக்ஷணங்கள் பொருந்திய தங்கள் பையன் இருக்கும் போது அவனை சிவார்ப்பணம் செய்வதே முறை யென்று தெளிந்து தான் நாயனுரும் நங்கையாரும் மனம் உவந்தார்கள். வேறு இடத்தில் பிள்ளையைப் பெறலாமென்று நினைத்தவர்களே யல்ல

சிறுத்: நேரமாகின்றது; வேறு யோஜனையே வேண்டாம்; அடியார் அமுது செய்ய வேண்டும். நம் குலம் உய்யவேண்டும்.

.

**“தாழாதே -- யழைப்போம்”.**

எனையென்றும், நீ யென்றும் பதங்கள் அமைந்த படியால் - “நாமிங்குய்ய" என்று தான் அர்த்தம். எதுகைக்காக எனை யென்று ஒருமைப் பதம்.

ஸுந்தரர் தேவாரம்

அத்தா ............ அல்லேன் எனலாமே!

அல்லேன் என்று சொல்லலாமோ ------? கேள்வி

சொல்லக் கூடாது.

சிறுத் - 74 செய்யுள்.

உறுப்பெல்லாம் -மாண அமைத்தீரே-

அமைத்தீரா - கேள்வி

**(63) "காதலனு நனி நீடுவகை யுறுகின்ற" ரென்று மகிழ்ந்து நகை செய்ய**

51-ம் செய்யுளில் பயிரவர் ‘தம்மில் மன முவந்தே’ யென்று சொன்னது மூவரையும் குறித்துச் சொன்னதாகும். மலர்த்த முகத்துடன் மகிழ்ச்சி பொங்க நாயனுரும் நங்கையாரும் அரிய வினை செய்யப் போகும் ஸமயம் குழந்தையும் அவர்களுடைய ஸந்தோஷத்தை பார்த்துப் பார்த்து மகிழ்ந்தது இது ஸஹஜமான

அர்த்தம். உள்ளர்த்தம்; - உயர்ந்த அர்த்தம் தொனிப்பு, இந்த நன்னுளில் என் உடல் தான் ஈசனடியார்க்கர்ப்பணம் ஆகப் போகின்றது. ஆதலால் உங்களை விட நானே அதிக மானந்த மடைகிறேன் என்று பெற்றோர்களுக்குத் தெரிவிக்குமாப் போல் நகை செய்தது.

இந்த விஷயத்தைத் திரு. கி. வா. ஜ. அவர்கள் குறிப்பிடவே யில்லை. (பக்கம் (24)

**(68)** "அடியேன் பால் நண்ணி"

நாயனர் காதலாலே தேடிப் போயும் அடியார் ஒருவரையும் காணவில்லை. பைரவர் அவராக சிறுத் தொண்டர் மனை விசாரித்து - அவர் **பால் நண்ணினர்**. பசித் தருளினர் - போஜணம் செய்ய இசைந்தார். எல்லாம் தாம் செய்த புண்ணியம் என்று சிறுத் தொண்டர் ஸந்தோஷிக்கிறர்...

**(68)** **பசித்தருள**

அடியார்கள் நம் வீட்டுக்கு எழுந்தருளுவது நம்மிடம் ஒரு உபகாரத்தை வேண்டியல்ல. நாம் செய்த புண்யத்தின் பலனுக நாம் திருவருள் பெறுவதற்கு அனுக்ரஹம் செய்வதற்கே வருகிறர்கள் என்று கொள்ளவேண்டும்:

ஆறு மாதத்திற்கு ஒரு முறை உண்பவர் முறை நாள் சேர, தம் வீட்டில் போஜனம் செய்ய ஒப்புக் கொண்டாரென்றல் அது தாம் செய்த தவம் என்றே சிறுத் தொண்டர் அடியாரைப் போற்றுகிறர்.

மேலும் பைரவராக வந்தவர் ஸாக்ஷாத் பரமேச்வரரே. அவர் பசியிலர் தாகமிலர்... (36 வது செய்யுள் குறிப்பைப் பார்க்கவும் (பக்கம் 3) இங்கே பசித்தவர் போல் நடித்து பிக்ஷை செய்ய ஒப்புக் கொண்டு அருள் புரிகின்றர்.

அடியார்களுக்கு ஓடு அளித்து வந்த திருநீலகண்ட நாயனரிடம்; ஈச்வரன் ஒரு பிக்ஷை ஓட்டை கொடுந்து, மறைத்து அருள் புரிகின்றர்.

அடியார்களுக்கு கோவணம் கொடுத்து வந்த அமர்நீதி நாயனரிடம் தான் ஒரு கோவணம் கொடுத்து, மறைத்து, அருள்கின்றர்.

வஸ்திரங்களை சுத்தம் செய்து கொடுத்து வந்த திருக்குறிப்பு தொண்டரிடம் ஒரு வஸ்திரம் கொடுத்து - மழை பெய்யும்படி செய்து அருள்கின்றர்.

தொண்டானர்க் கெந்நாளும் சோறளித்து வந்த சிறுத்தொண்டரிடம் ஈச்வரன் பசித்தவர் போல் நடித்து அருள் புரிகின்றர்.

ப

**(72) "எல்லாம் ஒக்கப்படைக்க"**

“தயாரான எல்லாவற்றையும் ஒரு சேரப்படைக்க” (அதாவது முதலில் ஒரு பாகம் வைத்து - பிறகு அவ்வப் போது உபசரித்து மறுபடி படைப்பு தென்றில்ஂல)

ஏன் ஒரு சேரப் படைக்கச் சொன்னுர்?

பாகமான எல்லாம் அவர் அருள் கடாக்ஷம் பெறவேண்டு மென்பதற்காக - தஂலபாகத்தையும் படைக்கும் படி உத்தரவு போட்டு அருள்கின்றுர்.

**(74) "அதுவும் கூட நாம் உண்பது"** இது முதலாவது இடர்; சந்தனத்தாதியார் தஂலக்கறியையும் தயார் செய்து வைத்திருந்த படியால் - முதல் இடர் தீர்ந்தது,

**(76) “நமக்குத் தனி யுண்ண ஒண்ணுது; ஈசனடியாரிப் பாங்கு நின்றுர் தமைக் கொணர்வீர்”**

இரண்டாவது இடர்; பைரவர் உத்திரவின் படி நாயனுர் மறுபடியும் தெருக்க ஊச் சுற்றி வருகிறுர்; ஈசனருளால் வேறு யாரும் எதிர்ப்பட வில்ஂல. (ஈச்வரன் ஸங்கல்ப்பம் நாயனுரை உடன் உண்ண உட்கார வைப்பது.)

**(77) "யானும் திரு நீறு ஜகத்திலிடுவார் தமைக் கண்டே யிடுவேன்”**

சிறுத் தொண்டர் என்ன கருத்துடன் இந்த வார்த்தை சொன்னுர்

.

“அடியார்களுக்கு எதிரில் நிற்கவும் யோக்யதையில்லாதவன். அவர்கள் விபூதி ருத்ராக்ஷம் அணிவதைப் பார்த்து அடியேனும் நீறு இடுகிறேன்; வேறு யாரும் சிறந்த அடியார் இல்லை என்ற காரணம் பற்றி தாங்கள் பிக்ஷை செய்யாமல் இருக்கக் கூடாது. விபூதியிடும் லக்ஷணமாவது அடியேனிடம் இருப்பதை அங்கீகரித்து, விபூதிக்குள்ள மகிமை பற்றி, அடியார் என்ற பதவியை எனக்கருளி, உங்கள் பக்கத்தில் உட்கார்ந்து உண்ணலா மென்று அனுமதித்து, பிக்ஷையை ஏற்றுக் கொள்ள வேண்டு கிறேன். இதற்கு மேல் உயர்ந்த அர்த்தமும் தொனிப்பு

ஹே ஸ்வாமின்! புத்ரபாசம் சேஷம் இருக்கிறதோ என்று பார்க்க திட்டம் போடுகிறீர்! என் பிள்ஊக் கறியை நான் உங்களுடன் சேர்ந்து உண்பதற்குத் தயார்.

இந்த ஸந்தர்ப்பத்திலும் ஈச்வரன் திருவாய் மலர்ந்தருளுவதன் முன் அவர் குறிப்பறிந்து சிறுத் தொண்டர் தயாராகி விட்டார். அவர் அன்பை அள்ளி அள்ளிப் பருகுகின்றுர் ஈசன்.

t +

திரு.கி.வா.ஜ. நாயனரின் இந்த வாக்கியத்தை விளக்காமலே விட்டார் (பக்கம் 25)

**(78) ஈச்வரன்: - உம்மைப்போல் நீறிட்டார் உளரோ உண்பீர் நீர்**

என்று அனுமதித்து, நங்கையைப் பார்த்து சிறுத் தொண்டருக்கும் தம் இலையிலிருந்து ஒரு பாகம் படைக்கச் சொல்லுகிறர்.

உலக நிலையில் நங்கையார் தம் கையால் தம் பிள்ளையைக் கறி செய்து தம் கணவருக்குத் தம் கையால் படைக்கும் நிலை. **இருவர்களில் ஒருவரும் மனம் கலங்கவில்லை**; இருவர்களும் புத்ர பாசம் வென்றவர்கள்; ஈசனடியார்க்கே ஆட்பட்ட வர்கள். பிள்ளைக் கறியென்ற நினைப்பே யில்லை. ஈசனடியார் கலத்திலிருந்து படைக்கப்படும் பாகம் ஈச்வர ப்ரஸாதம் என்றே மனதிற் கொண்டு மகிழ்ந்தார்கள்.

ஈச்வரன் அவர்கள் அன்பை மேலும் நுகர்ந்து அனுபவிக்கிறர். நித்யதிருப் தரான ஈச்வரன் மேலும் நுகரப் போகின்றார்.

**(78)** உம்மைப் பேரல் நீறிட்டார் உளரோ!"
திருஞான ஸம்பந்தர். 1 - ம் திருமுறை
பொடி நுகருஞ் சிறுத்தொண்டர்க் கருள் செய்யும் கோயில் பொருட்டாகக்
கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச் சரத்தானே.

(பொடி - பஸ்மா, நீறு) ஈச்வரன் கணபதீச்சரத்தில் கொண்டிருப்பது - சிறுத்தொண்டர்க் கருள் செய்வதற்கே. ஈச்வரன் நாயனர் குடும்பத்தினர்க்கு திருவடிப் பேற்றை அளிக்கப்போவதை, ஸர்வக்ஞரான திருஞான ஸம்பந்தர் முன்னதாகவே ஸூக்ஷ்மமாகத் தெரிவிக்கிறார்.

**(18) "தம்மை யூட்டவேண்டி யவருண்ணப் புகலும்"**

சிறுத் தொண்டர் இப்பொழுதும் முந்திக் கொண்டார். இனிமேலும் ஏதேனும் தடங்கல் சொல்லாமல் பைரவர் சாப்பிட வேண்டுமென்ற எண்ணத்துடன் அவர் உண்ணவேண்டி தான் முதலில் உண்ணத்தயாராகிறர்.

ஆனால் சிறப்பு அர்த்தம்.

என் மைந்தனைப் பாகம் பண்ணினேன்று நான் உம்மிடம் சொல்லப் போவ தில்லை. என் குழந்தைக் கறியை என் வாயில் போடும் போது நான் ஸங்கடப்படு வேனேவென்று நீர் நினைத்தால் நீர் தாம் தோற்றவர் ஆவீர். இதோ நான் மனமுவந்து உமக்கு முன் சாப்பிடத் தயார்.

அன்பை நுகர்ந்து வந்த ஈச்வரன் இப்போது திணறுகிருர் கி.வா.ஜ. "அடியாருக்கு'இட்டு உண்பது" என் விரதம் என்று பைரவர் சொன்னபடியால்" (பக்கம் 25)
பைரவர் "உடன் உண்பது" என்று சொன்ஞரே தவிர-
"இட்டு உண்பது என்று சொல்லவில்ஐல.

## ஓர் சங்கை விளக்கம்

அடியாரை முன்னூட்டிப் பின்னூட்டும் நெறியில் நின்ற சிறுத் தொண்டர், பைரவர் உண்ண வேண்டி யென்ருலும். அவர் முதலில் உண்ணப் புகலாமா- என்ற சங்கை ஏற்படலாம் உண்மையை ஆராய்ந்து பார்த்தால் விரத பங்கம் இல்ஐல. பிள்ஜளக் கறி தஜலக்கறியுள்பட எல்லாம் பைரவர் இஜலயில் ஒக்கப்படைக்கப் பெற்று, அடியார்க்கு அர்ப்பணமாகி விட்டது. அடியாராக வந்த ஈச்வரன் கடாக்ஷ வீக்ஷிண்யம் பெற்று ஒரு பாகம், ஈச்வரப் பிரஸாதமாக சிறுத் தொண்டர் கலத்தில் இருந்தது. ஈச்வரப் பிரஸாதமாகவே சிறுத் தொண்டர் ஏற்ற படியால், முன்னூட்டிப் பின்னூட் டும் நெறியில் தவறினவர் ஆக மாட்டார்.

**(78) "தடுத் தருளி"**

கண்ணப்ப நாயஞர் இரண்டாவது கண்ஐணயும் பெயர்க்க ஆரம்பிக்கும் போது "தரித்திலர்" - தேவ தேவர். மறைபேசும் திருவாயாலும், மலர்க்கையாலும் தடுத்தருள்கிருர். இந்த இடத்திலும் சிறுத் தொண்டர் தன் பிள்ஜளக் கறியை ஈச்வர ப்ரஸாதமாக வுண்ணத் தயாரானது கண்டு,

"தரித்திலர் தேவ தேவர்"

வாய் மொழியால் - தடுத்தருள்கின்றார் (கோபிப்பார் போல)

**(79)** "'ஆறுதிங்கள் .... கழித்துண்போம்"

"ஆறு மாதம் கழித்து சாப்பிடுகின்றவன் நான்"

என் விரதப்பிரகாரம் - நரப்பசு வுண்ணக் காத்திருக்கிறேன்.
தினம் சாப்பிடும் உமக்கு ரொம்ப பசியோ!? அல்லது பிள்ஜளக் கறி சாப்பிடுவதற்கு எனக்கு மேல் உமக்கு அவஸரமோ! ஸந்தர்ப்பம் எப்பொழுது நேருமென்று ஆர்வ மாக ஆவலாகக் காத்திருந்தீரோ? - என்று கேட்கிருர்.

"முன் உண்பது என்?" என்ற கேள்வியில் உண்ணப்படும் பதார்த்தம் பிள்ஜளக் கறியானதால் பிள்ஜளக்கறி சாப்பிடுவதற்கு உமக்கு ரொம்ப அவஸரமோ, என்றும் தொனிக்கும். இந்த தொனிப்பு அடுத்து வரும் சொற்ருெடரிலும் இருப்பதைப் பார்க்க லாம்.

**“நம்முடன் துய்ப்ப - மாறில் மகவு பெற்றிரேல் - மைந்தன்றனை யழையும்,**

என்ற வாக்யத்தை வாக்யத்தை இரண்டு இரண்டு வாக்யங்களாகப் பிரிப்போம்,

(1) உமக்கு மைந்தன் உண்டா?
(2) இருந்தால் நம்முடன் துய்ப்ப, அவனையும் அழையும்;

வீட்டில் குழந்தையிருந்தால் அவனை பட்டினியாக வைத்து - அடியார் சாப்பிடுவது முறையல்ல, அதற்காகப் பையனை அழையும் என்று சொல்வது போல் சொல்லுகிறுர்.

உமக்குப் பையன் இருக்கிறுனு- என்ற கேள்வியில், வேறு அர்த்தமும் தொனி க்கும்.

கலத்தில் இருப்பது பிள்ளைக் கறி.

நான் சொன்னவிதம் என்னை உண்பிப்பதற்காக வேறு ஒரு பிள்ளையைப் பெற்று பாகம் செய்திருக்கிறீர்; மனக்கலக்கம் சிறிதும் இல்லாமல் எனக்குமுன் சாப்பிட அவஸரப்படுகிறீர், உமக்கு ஒரு பிள்ளையிருந்து - அதைக் கறியாக்கியிருந் தால் மனது ஸங்கடப்படாமல், அதை உண்பீரா - இப்படி அவஸரப்படுவீரா என்று இடித்துக் கேட்பது போலும் கேள்வியின் தொனிப்பு.

உண்மை ஈச்வரனுக்குத் தெரியாதா? சிறுத்தொண்டர் வாக்கில் தன் பையனை பாகம் செய்த உண்மை வெளியாகாதென்றும் ஈச்வரனுக்குத் தெரியும். இந்த ஸங்கடமான நிலையிலும் சிறுத் தொண்டர் மனம் கலங்கவில்லை.

"ஸ்வாமி, அடியேன் பிள்ளையைத் தான் பாகம் செய்திருக்கிறேன்; வேறு யார் இதற்கு மன முவந்து நடந்திருப்பார்கள்? ஆகவே என் பிள்ளைக் கறியை நானே சாப்பிடும் இச்சையால் நான் அவஸரப் படவில்லை. ரொம்ப காலதாமதமாகிவிட்டது. நாங்கள் உய்யும் வண்ணம் தாங்கள் பசித்தருளினீர்கள்; தாங்களும் சீக்கிரம் உண்ண ஆரம்பிக்க வேண்டுமென்ற கருத்துடன் தான் நான் உண்ண ஆரம்பித்தது. அது பிழை தான், என் பிழையைப் பொறுத்தருளி தாங்களும் போஜனம் செய்ய வேண்டு மென்று” வாயினுற் சொல்லவில்லை.

தன் பிழையை ஒப்புக் கொள்வாராய் - மௌனமாக இருந்தார்.

அடுத்து “**மைந்தன் றனை யழையும்**” என்ற அடியார் சொன்ன போது -

“**ஈறு முதலு மில்லாதார்க்கு**" இப்போது உதவானவன் என்று மறை முகமாக, உண்மையையே சொன்னுர்.

**"ஈறு முதலு மில்லாதவர்"**

தம் ஆதிமத்யாந்த விஹீன. மேகம் விபும் சிதானந்தம்
அரூபம் அற்புதம் - உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும்... (கைவல்யம்)

அஜனி மம்ருத ரூபம் ஸாம்பமீசம் (ஆதிசங்கரர்)
ஸதாசிவாய நம : அஜாய நம: அவ்யயாய நம:

சிவ அஷ்டோத்தரம்: (அர்த்தம் பாஷ்யம் பார்க்கவும்)

**80** "நாடியழையும்" என்று அருள் புரிகிறுர்.
திரு.கி.வா.ஜ: - அழைப்பவரைப் போல--

"பாவனை செய்யத் தொடங்கி" (பக்கம் 26)
பைரவர் - மைந்தன் வந்தால் தான் சாப்பிடுவோம் என்று
சொன்னுர் - நாடி அழையும் என்று அருள் செய்திருக்கிறுர்
- அழைப்பது கடமை என்று அழைக்கிறுர்கள்.

"நாம் உய்ய - அடியார் உடன் உண்ண அழைக்கின்றார் -
செய்யமணியே சீராளா வாராய் - என்று **ஓலமிடுகிறுர்கள்**

பைரவர் "நாடியழையும்" என்று சொன்ன படியால் கூப்பிடுவது போல "பாவனை" செய்தார்களென்று சொல்லலாமா? பாவனை செய்த தொண்டர்களுக்கா பரமேச்வரன் திருவடிப் பேறு அளித்தார்?

**(82)** குழந்தை உயிர் பெற்று ஓடி வருகிறுன்.

**(84-85)** பரமேச்வரன் பார்வதி ஸமேதராய், ரிஷபாருடராய், சரவணத் தனயரோடும் காக்ஷி கொடுக்கிறுர்.

**(87)** கொன்றை வேணி யார்தாமும் பாகங் கொண்ட குலக் கொடியும்
வென்றி நெடுவேல் மைந்தரும் தம் விரைப் பூங்கமலச் சேவடிக்கீழ்
நின்ற தொண்டர் மனைவியார் நீடு மகனுர் தாதியார்
என்றும் பிரியாதே இறைஞ்சி யிருக்க உடன் கொண்டேகினுர்

**சுபம்**

**தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி**

உ

**ஆதி சங்கர பகவத் பாதாள் அருளிய சிவானந்த லஹரியைத் தழுவி**

# சிவபக்தி

**எழுதியவர்**

**திருவையாறு அண்ணுஸ்வாமி சிரௌதிகள்**

(1) அங்கோலம்
(2) மா கச்ச
(3) ஸஹஸ்ரம் வர்த்தந்தே
(4) ஹம்ஸ: பத்மவனம்
(5) ஜனனம்ருதியுதானும்
(6) யதா புத்தி : சுக்தௌ
(7) மனஸ்தே பாதாப்ஜே
(8) ஸர ரஸஞ
(9) ஸாரூப்யம்
(10) பாணத்வம்
(11) மார்க்காவர்த்தித
(12) நரத்வம் தேவத்வம்

12 ச்லோகங்களுக்கு வியாக்யானமும், அவைகளில் அமைந்துள்ள சைவஸித்தாந்தக் கருத்துக்களின் விளக்கமும் கொண்டது. வெறும் பதவுரையாக இல்லாமல் விசேஷ தாத்பர்யங்களுடன் கூடியது. வேத தேவார ஆதாரங்களும் சில இடங்களில் காட்டப் பட்டிருக்கின்றன. ஆசார்ய பக்தர்களும் சிவபக்தர்களும் அவசியம் படித்துணர்ந்து, சிவபக்தியில் ஈடுபட்டு ஜன்ம ஸாபல்யமடைய வேண்டும்.

கூடிய சீக்கிரம் அச்சிடுவதாக உத்தேசம்.

ஸுமார் 80 பக்கங்களில் அடங்கும்; விஜல விவரங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்.

**தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி**
N. R. 22 A, ஏர்போர்ட்டு க்வார்ட்டர்ஸ்
மீனம்பாக்கம், சென்னை - 27 :

உ

# ஸ்ரீ ஹரதத்தர் பக்த ஜனஸபை வெளியீடுகள்

1. ஸ்ரீ ஹரதத்தர் சரித்திரம் (சுருக்கம்)
2. ஸ்ரீ ஹரதத்தர் சிவலிங்கபூஜை (வர்ணப்படம்)
3. நவரத்ன மாஊல
4. பூஜா கல்ப்பம்
5. சுருதிஸூக்திமாஊல (நாகரம்) மூலம் மாத்திரம்
6. சிவ பஜனும்ருதம்
   முதல் பாகம் சிவபஜஊன, திவ்ய நாமம்
   இரண்டாம் பாகம் - மீனுக்ஷிகல்யாணம்
   அனுபந்தங்கள்
7. சிவ கவச சால்வைகள் (கதர்) ஹர சிவ நாமங்கள்
   பஞ்சாக்ஷரம் அச்சடித்தவை
   5 முழம் X 2 முழம்
   4 முழம் X 2 முழம்
8. மீனுக்ஷியம்மன் ஸ்துதி (தசச்லோகீ) நாகரம்
   கவிச்ரேஷ்டர் ஸ்ரீ ராமச்சந்திரஅய்யர் பாடியது
9. கௌரீ கல்யாணம் முதலிய சில பாடல்கள்
10. சிவபரத்வம்
11. சிவ பக்தி (சிவானந்த லஹரியைத் தழுவி)

**தபால் சார்ஜு பிரத்யேகம்**

கிடைக்குமிடம்:

**தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி**

பணியாளர், ஸ்ரீ ஹரதத்தர் பக்தஜன ஸபை

சென்ஊன விலாஸம்: - N R 22 - A ஏர்போர்ட்டு க்வார்ட்டர்ஸ்

மீனம்பாக்கம், சென்ஊன - 27

---

## அறிவிப்பு

திருநீலகண்ட நாயனுர், கண்ணப்ப நாயனுர் காரைக்கால் அம்மையார், அப்பூதியடிகள் புராணக் குறிப்புகள் காலக்ரமத்தில் வெளிவரும். இந்த வெளியீடு போல் ஒவ்வொரு வெளியீடும் 16 பக்கங்களாக வெளிவரும் யாரேனும் அன்பர் சிவ கைங்கர்யமாக ரூ 108 பணம் உதவினுல் அன்னுரின் உபகார வெளியீடு என்பதாகப் பிரசுரம் செய்யப்படும்.

**தி. வி. அ. சிரௌதி**

---